Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 295

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்

# SRI RAMANUJAN

Editor:—P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100.

---

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1973 ஏப்ரல்மீ வெளியிடப்பட்டது.



47–ஆம் ஸ்ரீ வைணவ மகாநாடு (23—12—1972) ஸ்ரீ வைணவ மகாசங்க முன்னாள் தலைவர் பதுமஸ்ரீ. கே. வேங்கடசுவாமி நயடு திருஉருவப் படத் திறப்பு விழாவில் ஸ்ரீமத்காஞ்சி. பிரதிதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரிய சுவாமிகள் மங்களாசாஸனம் செய்தருளல்

ஸ்ரீ ராமாநுஜன் - 295



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 25 | ப்ரமாதீசஹு சித்திரைமீ 1973 ஏப்ரல்மீ வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 7

# ஸம்வத்ஸர நாமவிமர்சம்

13—4—73ல் பிறந்த வர்த்தமான ஸம்வத்ஸரத்தின் பெயரைத் தமிழ் நாட்டினரான நாம் ப்ரமாதீச என்று வழங்கி வருகின்றோம். ஆனால் இது தவறான வழக்கென்று தெரிவிக்க வேண்டியதாகிது. நமது நாட்டுப் பஞ்சாங்கங்களிலும் பெரும்பாலும் ப்ரமாதீச என்றே அச்சிட்டிருக்கக் காண்கிறோமாதலால் இதைத்திருத்துவதில் பயனில்லை யெனினும் வஸ்துஸ்திதியை உலகறிவதற்காக இங்கு சிறிது எழுதுகிறோம். அறுபது வருடங்களுக்குமுன் நிகழ்ந்த இந்த ஸம்வத்ஸரத்தின் தொடக்கத்தில் அப்போதைய மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் இதைப்பற்றி மிகவிரிவான விமர்சம் வடமொழியில் எழுதியிருந்தேன். அதன் சுருக்கம் வருமாறு:— நாரத மஹர்ஷியின் அறுபது புத்திரர்களுக்கு ப்ரபவாதி நாமங்கள் இடப்பட்டிருந்தன வென்றும் அவையே முறையே ஸம்வத்ஸர நாமங்களாயின வென்றும் பிரமாணபலத்தினல் அறிகிறோம். இந்த நாமதேயங்கள் அறுபதும் அநுஷ்டுப் சுலோகங்களில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. ''ப்ரபவோ விபவச்சுக்ல: ப்ரமோதோத ப்ரஜாபதி:''. என்று தொடக்கமாக பத்தெட்டு சுலோகங்கள் சாந்திரத்னகர மென்கிற க்ரந்தத்தில் காணப்பட்டன. 'ப்ரமோதூத' என்று நான்காவது வருஷத்தின் பெயரை நாம் வழங்கிவருகிறோம். 'ப்ரமோத:' என்பதே ஸம்வத்ஸர நாமதேயமென்றும், 'அத' என்கிற அவ்யயம் பாதபூரணத்திற்காக இடையில் இடப்பட்டதென்றும்அறிகிறோம். அதற்கடுத்த ஸம்வத்ஸரத்தின் நாமத்தைப்ரஜோத்பத்தி என்று நாம் சொல்லிவருகிறோம். மேலே எடுத்துக் காட்டிய சுலோகத்தில் 'ப்ரஜாபதி:' என்றே உள்ளது. இதர தேசத்துப் பஞ்சாங்கங்களில் ப்ரஜாபதி நாமஸம்வத்ஸர மென்று அச்சிடப்பட்டிருந்ததையும் அப்போது கண்டிருந்தோம். இதே ரீதியில் வர்த்தமான ஸம்வத்ஸரத்தில் ஒரு பேதம் நேர்ந்திருக்கிறது. இது 'ப்ரமாதீ' வருஷமென்றும், ச்சா

ரம் பாதபூரணார்த்தமாக இடப்பட்டதென்றும் சொல்லுதற்கு இடமுள்ளது. பஹுதாந்ய வருஷத்துக்கு அடுத்ததான வருஷம் 'ப்ரமாதி' என்றுள்ளது. அதில் கடைசி எழுத்து தவர்கத்விதீய மென்றும் இப்போதைய வருஷத்தில் தவர்கத்ருதீய மென்றும் ப்ரமாணத்தினால் அறிகிறோம். ஸங்கேதநாமங்களாக வழங்கி வருமி வற்றை மாற்றிக் கொள்வதென்பது மிகவும் சிரமம் தான். சென்ற ப்ரமாதீச வருஷத்தில்தான் நாம் வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலை ஸ்தாபித்தோம். அப்போது "ப்ரமாதீச வர்ஷே சுபே ஸிம்ஹமாஸே......" என்று ச்லோகமியற்றி சிலா சாஸனமும் செய்திருக்கிறோம். ஆனாலும் வஸ்துஸ்திதியை தெரிவித்தபடி. நடந்த பரிதாவி ஸம்வத்ஸரத்திலும் அக்ஷரபேதங்கள் ப்ரமாண ஸித்தமாயிருப்பதை தெரிவித்திருக்கிறோம்.

## வைகுண்டவாஸியான ஜகத்குரு காதி ஸ்வாமியின் சதாப்தீ மஹோத்ஸவத் தொடக்கம்

(சுலோகம்) ஸ்ரீமுககும்பஸ்வாதீஜாதம் அநந்தார்யஸூரிமஹமீடே;
வத்ஸான்வவாயதிலகம் வாதிபயங்கரகுலாப்திசந்த்ரமஸம்.

ஜகத்விக்யாதப்ரபாவசாலியா யெழுந்தருளியிருந்த ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் ஜகத்குரு ஸ்ரீகாதீ அநந்தாசார்ய ஸ்வாமிக்கு நேற்று மாசிமீ ஸ்வாதி நக்ஷத்ரத்தில் தொண்ணூற்றொன்பது திருநக்ஷத்திரம் பூர்த்தியாகி இப்போது நூறாவது திருநக்ஷத்ரம் நிகழ்ந்து வருகிறது. இதையொட்டி இந்த ஸம்வத்ஸரம் முழுவதும் ஒவ்வொரு மாதத்திலும் ஸ்ரீஸ்வாமியின் திருநக்ஷத்ரமாகிய ஸ்வாதீ நக்ஷத்ரத்தன்று ஆங்காங்கு விசேஷக் கொண்டாட்டம் நடத்தி வந்து அடுத்தவாண்டு மாசி மாதத்தில் பலவிடங்களில் ஏக காலத்தில் விசேஷ மஹோத்ஸவம் நடத்த சிஷ்ய வர்க்கங்களால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

ஸந்நிதி வீதி ஸ்ரீகாதி ஸ்வாமி திருமாளிகையில் நேற்று ஸ்வாதீ நக்ஷத்ரத்தில் (22—3—73) வியாழக்கிழமையன்று இது உபக்ரமமாயிற்று. காலை 7 மணி முதல் 8 மணி வரை வேத பாராயணமும், 8 மணி முதல் 9 மணி வரை திவ்யப்ரபந்த ஸேவையும் 9 மணி முதல் 10 மணி வரை ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை திருப்பதி பெரிய (கோவில் கேள்வி) ஜீயர் ஸ்வாமியின் தலைமையில், வித்வான்களால் காதி ஸ்வாமி ப்ரபாவோபந்யாஸமும் நடைபெற்றன.

ஸ்ரீ காதி ஸ்வாமி திருமலை திருப்பதியில் எழுந்தருளியிருந்த தமது மாதுலரான திருமலை அநந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீமத் ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் வித்யாப்யாஸத்தை முடித்துக்கொண்டு, சில ஸம்வத்ஸரங்கள் வடநாட்டில் சிஷ்ய ஸஞ்சாரமும் செய்தருளி காஞ்சிக்கு எழுந்தருளியான பிறகு (அதாவது 1900-ல்) ஸ்ரீ ஸுதர்சன முத்ராக்ஷரசாலை யென்கிற அச்சுக்கூடத்தை ஸ்தாபித்து அதன் மூலமாக சதுச்சாஸ்த்ர க்ரந்தங்களையும் அச்சிட்டு, தாமே அருளிச்செய்த சில க்ரந்தங்களையுமச்சிட்டு, விசேஷமாக லோகோபகாரம் செய்தருளின விஷயம் ஜகத்ப்ரஸித்தமானது. அந்த க்ரந்தங்களெல்லாம் 20 ஸம்வத்ஸரங்களுக்கு முன்னமே துர்லபங்களாய்விட்டன. அவற்றையெல்லாம் இந்த சதாப்தீ மஹோத்ஸவ ஸ்மாரக சின்னமாக ஸ்ரீஸ்வாமியின் திருக்குமாரரான ஸ்ரீ காதி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் ஸஹயோகத்தைக் கொண்டு மறுபதிப்பு செய்து வெளியிட சிஷ்ய வர்கங்கள் தீவ்ரமாக முயன்றிருக்கிறார்கள். பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவருளால் இம்முயற்சி நன்கு நிறைவேறவேணுமென்று ஆசாஸிக்கிறோம்.

—x—

# 47-ஆம் ஸ்ரீவைஷ்ணவ மகாநாடு

நா. வேணுகோபால நாயகர், பி. ஏ., பி. எல்.,
காரியதரிசி, ஸ்ரீவைஷ்ணவ மகா சங்கம்.

சென்னை ஸ்ரீவைணவ மகா சங்கத்தின் ஆதரவில் 47-ஆம் ஸ்ரீவைணவ மகா நாடு உப்புட்டூர் ஸ்ரீ ஆழ்வார் செட்டியார் ராமாநுஜ கூடத்தில் 23—12—1972 முதல் நான்கு நாள்கள் சிறப்பாக நடைபெற்றது. முன்னாள் சென்னைக் காவல் துறை ஆணையர், திரு. S. பார்த்தசாரதி ஐயங்கார் மாநாட்டைத் தொடங்கிவைத்தார். ஸ்ரீவைணவ மகா சங்கத்தின் தலைவர், முன்னாள் சென்னைமேயர், திரு. ம. இராதாகிருஷ்ணப் பிள்ளை தமது முன்னுரையில் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். சங்கப் பொதுக் காரியதரிசியும், நிதிகாப்பாளருமான திரு. C. சஞ்சீவி நாயடு, வானமாமலை மடம், திருக்குறுங்குடி மடம், திருக்கோவலூர் ஜீயர் மடம் மற்றும் பெரியார்களிடமிருந்து வந்த ஆசிச் செய்திகளை வாசித்தார். திருச்சித்திர கூடம் திரு. தி. கோ. இராமாநுஜ தாசர் மாநாட்டிற்குத் தலைமை வகித்தார்.

சென்னை உயர் நீதிமன்ற முன்னாள் மாண்புமிகு தலைமை நீதிபதி Dr. P. V. ராஜமன்னார், ஸ்ரீவைணவ மகா சங்கத்தின் தலைவராய் விளங்கிய, வைகுண்டவாசியான, பதுமஸ்ரீ கே. வேங்கட சுவாமி நாயடுவின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்தார். ஸ்ரீ வேங்கடசுவாமி நாயடுவின் ஸ்ரீவைணவ மத பக்தி, தரிசன வளர்ச்சிக்காக அவர் செய்த பல தொண்டுகள், ஸ்ரீவைணவ ஆலயங்களை நல்ல முறையில் பரிபாலனம் செய்வதற்காக அவர் சென்னை ராஜ்ய அறநிலையப் பாதுகாப்புத்துறை அமைச்சராய் இருந்தபோது செய்த ஏற்பாடுகள், ஸ்ரீவைணவ மத வளர்ச்சிக்காகத் 'தரிசனம்' பத்திரிகையை ஆங்கிலத்தில் நடத்தியது, ஸ்ரீவசனபூஷணத்தை ஆங்கிலத்தில் சுருக்கி வெளியிட்டது, ஸ்ரீவைணவ மகா சங்கத்தின் மூலம் சிறப்பான முறையில் பிரசாரங்கள் புரிந்தது முதலான சேவைகளைப் பற்றிப் பாராட்டிப் பேசினார்.

காஞ்சி, பிரதிவாதி பயங்கரம், மகாமகிமோபாத்யாய, பாரத பண்டிதமணி, ஜகதாசாரிய சிம்மாசனாதிபதி ஸ்ரீ அண்ணங்கராசாரிய சுவாமிகள் மகாநாட்டை மங்களாசாசனம் செய்தருளியதன் சுருக்கம் வருமாறு:

சுவாமி எம்பெருமானார் காலத்திற்கு முன்பு, ஸ்ரீவைணவ ஞானம் ஓராண் வழியாகவே பெறப்பட்டு வந்தது. அதாவது ஒரு ஆசாரியரிடம் ஒரு சமயத்தில் ஒரு சீடர்தான் காலட்சேபம் சேவிக்கலாம். ஒரே விஷயத்தை இருவர் சேவிக்க விரும்பினாலும், இருவரும் சேர்ந்து சேவிக்க இயலாது. ஒருவர் காலட்சேபம் சேவித்த பிறகு தான் மற்றவர் காத்திருந்து போய்க் காலட்சேபம் சேவிக்கவேணும்.

காரேய்கருணை இராமாநுசர் இப்படி ஓர் ஆண் வழியாக உபதேசிக்கப்பட்ட வரம்பைத் தம் காலத்தில் அறுத்தார். வரம்பை அறுக்கிறது என்பது மிகவும் பெரிய விஷயம்: சுலபமானது அன்று. 'ஆசை உடையோருக்கு எல்லாம் ஆரியர்காள்! கூறுமின்' என்று பேசி வரம்பை அறுத்துவிட்டார், நம் சுவாமி எம்பெருமானார்.

இதையே ஸ்ரீமணவாள மாமுனிகள், மொத்தம் 73 பாடல்கள் கொண்ட தம் உபதேசரத்தின மாலையில், நடுநாயகமாக உள்ள 37வது பாடலில் பொறித்து வைத்துக் கொண்டாடுகிறார்.

" ஓராண் வழியா யுபதேசித் தார்முன்னோர்
ஏரா ரெதிராச ரின்னருளால்—பாருலகில்
ஆசையுடை யோர்க்கெல்லால் ஆரியர்காள்! கூறுமென்று
பேசி வரம்பறுத்தார் பின்!"

இந்த மிக உயர்ந்த ஸ்ரீராமாநுஜாசாரிய திவ்விய ஆஜ்ஞையை சிரமேற் கொண்டு ஆங்காங்குப் பலர் கூடிய திரள்களில், ஸ்ரீவைணவ நூல்கள் காலட்சேபமாக சாதிக்கப்பட்டு வருகின்றன.

இங்கே கூடியுள்ள ஸ்ரீவைணவ மகாநாடும், சுவாமி எம்பெருமானாருடைய நியமனத்தை ஒட்டியே நடைபெற்று வருகிறது. 47 ஆண்டுகளாகத் தொடர்ந்து இந்த ஸ்ரீவைணவ மகாநாடு நடைபெற்று வருவது மிகவும் பாராட்டத் தக்கது. இம்மகாநாட்டை நடத்திவரும் இதன் நிர்வாகிகளை மிகவும் மெச்சுகிறேன்.

இந்த ஸ்ரீவைணவ மகாசங்கம் ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து மிகுந்த ஊக்கத்துடன் சேவை புரிந்துவந்த பதுமஸ்ரீ கே. வேங்கட சுவாமி நாயடவர்களின் திருவுருவப் படத்தை இந்த மகாநாட்டில் திறந்துவைத்தது மிகவும் பொருத்தமானதாகும். பதுமஸ்ரீ வேங்கட சுவாமி நாயடவர்களின் 'அப்பா' குடும்பத்தை வெகுகாலமாக அறிவேன். இவருடைய திருத்தகப்பனார் திரு. கே. பாஷியம் நாயுடு, சிறிய தகப்பனார் திரு. கே. நாராயணப்ப நாயடு மிகவும் ஸ்ரீவைணவ பக்தர்கள். பல கைங்கரியங்களைச் செய்துள்ளனர்.

ஸ்ரீ வேங்கட சுவாமி நாயடு இனிமையான குணங்களை உடையவர். இளமையில் முறையாக ஸ்ரீவைணவ ஞான நூல்களைக் காலட்சேபம் சேவித்தவர். ஆங்கிலக் கல்வியும், சட்டகலையில் பல்கலைக் கழகப் பட்டமும் பெற்றவர். நகர சபை, அரசாங்க விஷயங்களில் ஈடுபட்டு, சென்னை நகரில் மேயராகவும், சென்னை ராஜ்ய இந்துமத பரிபாலனத் துறை அமைச்சராகவும் விளங்கியவர். நமது இராமாநுஜ தரிசன முன்னேற்றத்திற்காக மிகவும் உழைத்தவர். இந்த ஸ்ரீவைணவ மகாசங்கதிற்குத் தலைவராய் விளங்கி இந்தச் சங்கத்தை மிகவும் வளர்ச்சி அடையச் சேவைபுரிந்தார்.

ஸ்ரீ கே. வேங்கடசாமி நாயடு பரமபதித்த சேதி விருந்தாவனத்தில் இருந்த சமயம் அறிந்தேன். உடனே அந்த திவ்யதேசத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீரங்க மன்னார் ஸ்ரீ ஆண்டாள் சந்நிதியில், இந்த ஸ்ரீவைணவ மகா சங்கமும், அதன் சார்பில் நடைபெறும் ஸ்ரீவைணவ மகாநாடுகளும் முன்போல எப்போதும் சிறப்பாக நடந்து வரவேணுமென்று சரணாகதி செய்து பிரார்த்தித்தேன்.

முன்னைக்காட்டிலும், இம்மகாநாடு பெருந்திரளாக இவ்வாண்டு கூடியிருப்பதைக் காண மகிழ்கிறேன்.

இந்த ஸ்ரீவைணவ மகாநாடு ஒவ்வோர் ஆண்டும் சிறந்த முறையில் நடைபெற வேண்டுமென்று மங்களாசாசனம் புரிந்து உபன்யாசத்தை முடித்தார்.

42ஆம் ஸ்ரீவைணவ மாதர் மகாநாட்டிற்கு, முன்னாள் சென்னை மேயர், திரு. கே. கமலக்கண்ணன் மனைவியார், திருமதி ஜமுனா அம்மையார் தலைமை வகித்தார். ஸ்ரீ தி. ம. புருஷோத்தமதாசர் வந்தனோபசாரம் கூற மகாநாடு இனிது முடிந்தது.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# டில்லிமாநகரில் அகில பாரத வேதவித்வத் ஸம்மேளனம்.

— ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் —

இந்தியா முழுவதிலும், ஏன்? த்வீபாந்தரங்களிலுங்கூட இந்தத் தலைப் புள்ள விசேஷத்தைக் கேள்விப் படாதாரில்லை. ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யராய் உபயவேதாந்த ப்ரவர்த்தன துரந்தரராய் திகந்த விச்ராந்த கீர்த்தி விபூஷிதராய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் இருபது ஸம்வத்ஸரங்களுக்கு மேலாக இமவந்தந்தொடங்கி யிருங்கடலளவும் விசிஷ்டாத்வைதமதப் பிரசார வகைகளை வெகு ஆச்சரியமாக நடத்திவருவது நாடுநகாமும் நன்கறிந்ததே. ப்ரக்ருதம் நமது தலைநகரான டில்லிமாநகரில் 4-4-73 முதல் 12—4—73 தேதி வரையில் 9 நாள் நடத்த ஸங்கல்பித்த க்ரது விசேஷமும் அகிலபாரத வேதவித்வத்ஸம்மேளனமும் ஆச்சரியங்களில் தலையான ஆச்சரியச் செயலாகும். இதுபற்றிய விளம்பரங்கள் நாலாறு மாத காலமாகவே நகரங்கள் அக்ரஹாரங்கள் க்ராமங்கள் என்கிற வாசியற எங்கும் பரவி இருப்பதால் இதைப் பற்றி இங்கு நாம் விரிவாக எழுதத் தேவையில்லை. உலகத்திலுள்ள த்ரிமதஸ்தர்களான வைதிக வித்வான்கள் யாவரும் திரண்டு டில்லிமாநகர் சேர்ந்து இந் நிகழ்ச்சியில் கலந்து கொண்டு ஆனந்த அமுதக்கடலில் மூழ்கி இருக்கின்றனர்கள். அன்பர்கள் இப் பத்திரிகையைப் பெற்று வாசிக்கும்போது மேலே கண்ட விசேஷம் நடைப்பெற்றுக் கொண்டிருக்கலாம். அல்லது முடிவு பெற்றிருக்கலாம். இவ் விசேஷம் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போதே அன்பர்கள் இதனை வாசிக்க வேண்டும் என்ற ஆவலினால் இதனை விரைவாக வெளியிடுகிறோம். இன்று ஏப்ரல் மாதம் ஐந்தாந்தேதி. நாம் இன்று மாலை ஆறு மணிக்கு விமான வாயிலாகத் தலைநகர் சென்று சேர்ந்து பேரின்ப வெள்ளத்தில் ஆழ்ந்திருந்து 13—3—73 தமிழ் வருஷப்பிறப்பன்று ஸ்வஸ்தானம் சேருவோம். அவ்விடத்திய விசேஷங்களை எல்லாம் பிறகு விரிவாகத் தெரிவிப்போம்.

அவ்விடத்து ஸதஸ்ஸில் நாம் விஜ்ஞாபிக்க இருக்கிற சித்ரகவித்வ ச்லோகங்கள் சிலவற்றை இங்குச் சுருக்கமான உரையுடன் வெளியிடுகிறோம். சித்ரகவித்வ

மாவது மேலே கண்ட நிகழ்ச்சியின் வருஷமாத தேதிகளிலுள்ள இலக்கங்களுக்கு வாசகமான சப்தங்களை யிட்டு ஸ்ரீமன் நாராயணனையும், ஸ்ரீமன் நாராயண ஜீயர் ஸ்வாமியையும். துதிப்பதாகும். அலங்கார சாஸ்த்ரத்தில் முத்ராலங்கார மென்பதொன்று. அவ்வலங்கார வகையில் அமைவதாகுமிது. 4·4–1973ல் இவ்விசேஷம் தொடங்கப் படுவதால் இதிலுள்ள ஆறு இலக்கங்களையிட்டு (அதாவது 3, 7, 9, 1, 4, 4 என்கிற இவ்வாறு இலக்கங்களையிட்டு) அமைக்கப்பட்ட சுலோகங்களைக் கேளீர்.

—சித்ரகவித்வம்—

𑌅𑌂𑌕𑍇𑌷𑍁 𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌸𑌪𑍍𑌤𑌸𑌪𑍍𑌤𑍍𑌯𑌯𑍁𑌤𑌭𑌾𑌃, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌵𑌸𑍍𑌫𑍂𑌰𑍍𑌤𑌿𑌤𑌃
𑌨𑌿𑌤𑍍𑌯𑍈𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌗𑌣𑍈𑌸𑍍𑌸𑌦𑌾 𑌸𑌹 𑌯𑍁𑌤𑍋𑌪𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑌿𑌵𑌾𑌗𑍍𑌗𑍋𑌚𑌰𑌃 ।
𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑍍𑌯𑌮𑍁𑌪𑍇𑌯𑍁𑌷𑌾𑌮𑌿𑌹 𑌨𑍃𑌣𑌾𑌂 𑌸𑍇𑌵𑍍𑌯𑌸𑍍𑌸 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃
𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑍁𑌰𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌮𑌸𑍇𑌵𑌿𑌨𑌾 𑌮𑍁𑌨𑌿𑌵𑌰𑍇𑌣𑌾𑌨𑍇𑌨 𑌧𑌨𑍍𑌯𑌃 𑌕𑍃𑌤𑍀 ॥

அங்கேஷு த்ரிஷு ஸப்தஸப்த்யயுதபா: நித்யம் நவஸ்ப்பூர்த்தித:
நித்யைர்முக்தகணைஸ்ஸதா ஸஹ யுதோபி எகாகி வாக்கோசர:;
சாதுர்வித்யமுபேயுஷாமிஹ ந்ருணாம் ஸேவ்யஸ் ஸ நாராயண:
ஸ்யாத்துர்யாச்ரமஸேவிநா முனிவரேணநேந தந்ய: க்ருதீ.

[த்ரிஷு' அங்கேஷு] திருமுடி திருமார்பு திருவடிகளாகிற மூன்று திவ்யாவயவங்களில் [ஸப்தஸப்த்யயுதபா:] *கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண் முடியன்* என்கிற பெரியாழ்வார் பாசுரப்படிக்கும், "நறைப்படலைத்துழாய் மார்பில் நாயிறுபோல் மணி விளங்க" [திருவரங்கக்கலம்பகம்] என்கிற பிள்ளைப் பெருமாளையங்கார் பாசுரப்படிக்கும் "சொல்லமாட்டேனடியேன் உன்துளங்கு சோதித்திருப்பாதம் எல்லையில் சீரிள நாயிறிரண்டுபோலென்னுள்ளவா" (திருவாய்மொழி 8—5—5) என்கிற நம்மாழ்வார் பாசுரப்படிக்கும் பலவாயிரம் ஸூரியர்கள் ஏக காலத்தில் ஜ்வலிப்பது போன்ற மிக்க வொளியுடையவன் என்றபடி. ஸப்தஸப்தியென்று ஸூர்யனுக்குப்பெயர். அயுதமென்றது பதினாயிரமென்றபடி.

(நித்யம் நவஸ்பூர்த்தித:)— நித்யாநுபவம் பண்ணுநிற்கச் செய்தேயும், "அப்பொழுதுக்கப் பொழுதென்னாரவமுதமே"என்கிறபடியே புதுமை மாறுதிருக்குமவன். இதில் நவசப்தம் சப்தசக்தியால் ஒன்பதைக் காட்டும். ஸுதர்சன சதகத்தில், "ஸப்தார்ச்சிச்சோஷிதாஷ்டாபத நவகிரண" என்றவிடம் காண்க.

(நித்யை: முக்தகணை: ஸதா ஸஹ யுதோபி இத்யாதி) ப்ரளய காலத்தில் நளிர் மதிச்சடையனும் நான்முகக்கடவுளும் முதலானோர் முடிந்தாலும், நித்யவிபூதியில் நித்ய முக்தர்களின் ஸத்பாவத்துக்குக் குறையில்லையே. அப்படியிருந்தும் "ஏகோஹவை நாராயண ஆஸீத்" இத்யாதி மஹோபநிஷத்தில், "ஸ ஏகாகீ நரமேத" என்று எம்பெருமானை ஏகாகியாகவும் துன்புற்றிருப்பவனாகவும் ச்ருதி

ஓதிற்று. இவ்விடத்தில் ஒன்று என்கிற லக்கத்திற்கு ஏகாகீ என்கிற இவ்வளவே விவக்ஷிதம். "ஏகாகீ ந ரமேத" என்று ச்ருதி ஓதினதின் கருத்தை பிள்ளை லோகாசார்யர் ஸ்ரீ வசனபூஷணத்தில், "த்ரிபாத்விபூதியிலே பரிபூர்ணனுபவம் நடவாநிற்கச் செய்தேயும், அது உண்டதுருகாட்டாதே, தேசாந்தரகதனான புத்ரன் பக்கலிலே பித்ருஹ்ருதயம் கிடக்குமாபோலே ஸம்ஸாரிகளைப் பிரிந்து ஆற்றமாட்டாதே...." என்கிற சூர்ணையினால் தெளிவித்தருளினர். இதன் விவரணம் உபந்யாஸத்தில் கேட்கத்தகும்.

(சாதுர்வித்த்ய முபேயுஷாமித்யாதி) "சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந; ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு ரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப." என்று கீதாசார்யன் பணித்தபடியே நான்குவகைப்பட்ட அதிகாரிகளால் ஸேவிக்கப்படுபவன் என்று இவ்வளவும் எம்பெருமானுக்கிட்ட விசேஷணங்கள். இதில் மாதத்தின் லக்கமாகிய நான்கு ஸூசிதமாயிற்று.

(ஸ்யாத்துர்யாச்ரம ஸேவினா முனிவரேண்யேந தந்ய: க்ருதீ) கீழ் மூன்று பாதங்களால் விசேஷிக்கப் பட்ட எம்பெருமான் நமது ஜீயர் ஸ்வாமியினால் க்ருதக்ருத்யனாகியிருப்பன் என்றால் மிகையாகாது. எம்பெருமான் ஸ்வத: க்ருதக்ருத்யனாயிருக்கச் செய்தேயும், "அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம், க்ருதக்ருத்யஸ்ததா ராம:...." என்ற ஸ்ரீ ராமாயணச்லோகத்தை இங்கு அநுஸந்திப்பது. இங்கு 'துர்யாச்ரம' என்பதனால் தேதி லக்கமாகிய நான்கு ஸூசிதமாயிற்று.

---

## வருந்திப்பொருளுணரவேண்டாத மற்றொரு சித்ர ச்லோகம்.

𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌕𑍍𑌯𑌾𑌮𑌥𑍋 𑌸𑌪𑍍𑌤𑌲𑍋𑌕𑍍𑌯𑌾𑌂 𑌧𑌰𑌿𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌂 𑌨𑌵𑌦𑍍𑌵𑍀𑌪𑌵𑌤𑍍𑌯𑌾𑌮𑌸𑌾𑌵𑍇𑌕 𑌏𑌵 ।
𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌾𑌶𑍍𑌰𑌮𑍀 𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌵𑌰𑍍𑌯𑍋 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌿𑌗𑍍𑌵𑌿𑌭𑌾𑌗𑍇𑌷𑍁 𑌨𑌾𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌧𑍀𑌰𑌃 ॥

த்ரிலோக்யாமதோ ஸப்தலோக்யாம் தரித்ர்யாம்
நவத்வீபவத்யாம் அஸாவேக ஏ்வ,
சதுர்த்தாச்ரமீ ஸ்வாமிவர்யோ மஹாத்மா
சதுர்திக்விபாகேஷு நாந்யோஸ்தி தீர:.

(கருத்து.) மூவுலகங்களினுள்ளும், ஏழுலகங்களினுள்ளும், நவத்வீபங்களையுடைய இப்பூமண்டலத்தினுள்ளும் நாற்றிசைகளினுள்ளும் நம் ஜீயர் ஸ்வாமியொருவரே நற்காரியங்களைத் துணிந்து செய்ய வல்ல மஹாபுருஷராவர்—என்றபடி.

## வைதிகர்கள் உகக்கும் சித்ரகவித்வம்

வைதிக கருமங்களுக்கு ஸங்கல்பம் செய்து கொள்ளும் போது ஸம்வத்ஸரம் அயனம் ருது மாஸம் பக்ஷம் திதி வாரம் நக்ஷத்ரம் ஆகிய எட்டையும்

சொல்லுகிறே மல்லவா? அவ்வண்ணமாக ப்ரக்ருத க்ரதுவைத் தொடங்கும் போது; பரிதாவி நாமஸம்வத்ஸரே உத்தராயணே சிசிரருதௌ, மீநமாஸே, சுக்லபக்ஷே ப்ரதமாயாம் திதௌ ஸௌம்யவாஸரே, ரேவதீ நக்ஷத்ரே என்று ஸங்கல்பம் செய்தாகியிருக்கிறது. இவ்வெட்டையும் அமைத்து முத்ராலங்கார ரீதியிலேயே அமைக்கப்பட்ட சித்ரகவித்வம் கேளீர்.

𑌧𑍂𑌰𑍍𑌤𑌾𑌸𑍍𑌸𑍍𑌯𑍁𑌃 𑌪𑌰𑌿𑌧𑌾𑌵𑌿𑌨𑍋 𑌯𑌤𑌿𑌵𑌰𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌰𑍇 𑌕𑍍𑌰𑌤𑍁𑌸𑍍𑌤𑍂𑌤𑍍𑌤𑌰𑌃
𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌂 𑌶𑌿𑌶𑌿𑌰𑌂, 𑌕𑌦𑌾𑌪𑌿 𑌨 𑌭𑌵𑍇𑌤𑍍𑌤𑌨𑍍𑌮𑍀𑌨𑌕𑍇𑌤𑍋𑌃 𑌪𑌦𑌮𑍍 ।
𑌶𑍁𑌕𑍍𑌲𑌾𑌨𑍍𑌤𑌃 𑌕𑌰𑌣𑍈𑌸𑍍𑌸𑌹𑍈𑌵 𑌵𑌸𑌤𑌿𑌃, 𑌖𑍍𑌯𑌾𑌤𑌿𑌰𑍍𑌦𑌿𑌶𑌾𑌸𑍍𑌵𑌗𑍍𑌰𑌿𑌮𑌾
𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌸𑍌𑌮𑍍𑌯𑌮𑍁𑌖𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃, 𑌶𑍁𑌭𑌦𑌨𑍋𑌦𑍀𑌪𑍍𑌤𑍍𑌯𑍈𑌵 𑌪𑍂𑌷𑌾 𑌜𑌿𑌤𑌃 ॥

தூர்த்தாஸ் ஸ்யு: பரிதாவிநோ யதிவரஸ்யாக்ரே, க்ரதுஸ்தூத்தர:
தத்ஸ்வாந்தம் சிசிரம் கதாபி ந பவேத் தந்மீநகேதோ: பதம்,
சுக்லாந்த: கரணைஸ் ஸஹைவ வஸதி:, க்க்யாதிர் திசாஸு அக்ரிமா
நித்யம் ஸௌம்ய முகஸ்திதி:, சுபதநோர் தீப்த்யைவ பூஷா ஜித: ॥

விச்வாமித்ர முனிவர் சிறியதொரு வேள்வி செய்யத் தொடங்கினர். பல அரக்கர்கள் வந்து அதற்கு இடையூறு செய்தனர். அதனால் அவர் தயரத மன்னவரிடம் ஓடவேண்டிற்று. நம் ஜீயர்ஸ்வாமி செய்யும் வேள்வியோ ஸாமான்யமான தன்று, நபூதோ ந பவிஷ்யதி என்னும்படியானது. இதற்கு எத்தனையோ இடையூறுகள் நேரவேண்டும். இடையூறு செய்ய நினைப்பவர்கள் இருக்கலாம். அவர்கள் எல்லோரும் பாறிப்பறந்தோடுகின்றனர்–என்கிறது இதில் முதல் பாதம். இங்கு பரிதாவி ஸம்வத்ஸரமும் உத்தராயணமும் ஸூசிதம். [தத்ஸ்வாந்தம்-சிசிரம்] ஸ்வாமியின் திருவுள்ளம் மிகக்குளிர்ந்தது. குற்றம் செய்பவர் பக்கலிலும் சீற்றமுறுவது கிடையாது. புருஷஸூக்தத்தில் "சந்த்ரமா மனஸோ ஜாத:" என்று எம்பெருமானுடைய இதயத்திலிருந்து சந்திரன் தோன்றினன் என்பது போல நம் ஸ்வாமியின் திருவுள்ளத்திலும் சந்திரன்தோன்றியிருக்க வேண்டும். இதில் சிசிரருது ஸூசிதம்.[கதாபி ந பவேத் தன்மீனகேதோ: பதம்] ஜீயர்ஸ்வாமியின் திருவுள்ளம் ஒரு போதும் காமபரவசமாகாதென்கை. இங்கு (மீன) என்பதனால் பங்குனி மாதம் ஸூசிதம்.

[சுக்லாந்த:கரணைஸ் ஸஹைவ வஸதி:] ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் "ஸித மனஸம் தமவேஹி விஷ்ணுபக்தம்" என்றும், திருப்பல்லாண்டில் "என்னை வள்ளுயிராக்கவல்ல" என்றும் கூறினபடியே சுத்தமான ஹ்ருதயத்தை உடையவர்களோடுகூடவே ஸஹவாஸம் செய்பவர் நம் ஜீயர் ஸ்வாமி என்கை. தம்மையடுத்தவர்களையும் தம்மைப் போல் ஆக்குபவர் என்றபடி. இதில் சுக்லபக்ஷம் ஸூசிதம். [க்க்யாதி: திசாஸு அக்ரிமா] நம் ஜீயர் ஸ்வாமியின் புகழானது மற்றெல்லாருடைய புகழையும் விஞ்சித்திசைகள் தோறும் முந்நிற்பது. இதில் அக்ரிமா] என்பதனால் பிரதமாதிதி ஸூசிதம். [நித்யம் ஸௌம்யமுகஸ்த்திதி:] திருமுகமண்டலத்தில் ஒரு போதும் கடுகடுப்பில்லாமே தர்சநீயமாய் இருக்கும் படியைச் சொல்லுகிறது. இதில் ஸௌம்ய என்பதனால் புதவாஸரம் ஸூசிதம்

[சுபதநோர்தீப்த்யைவ பூஷா ஜித:] திருமேனியின் ஒளியானது ஸூர்யனை வென்று விளங்குமது. இங்கு பூஷா என்னும் சொல்லால் ரேவதீ நக்ஷத்திரம் ஸூசிதம். 'ரேவதீ நக்ஷத்ரம் பூஷா தேவதா'' என்று வேதமோதிற்று. ஆக இந்த சுலோகத்தில் பரிதாவிவருஷம், உத்தராயணம், சிசிரருது, மீனமாஸம், சுக்லபக்ஷம், ப்ரதமா திதி, புதவாஸரம், ரேவதீ நக்ஷத்திரம் ஆகிய இவை அடைவே ஸூசிப்பிக்கப் பட்டனவாயின.

---

(ஸமாப்திதினத்தில் உபந்யஸிக்கும் சுலோகம்) (12—4—1973ல் ஸமாப்தியாதலால் அந்த லக்கங்களை அடைவே கொண்ட சித்ரகவித்வம்)

யதித்ரயஸதர்மணு ஸூஸத்ருசா ச ஸப்தர்ஷிபி:
நவஸ்துதவ்ருஷாத்ரிராட் சரணபங்கஜைகாந்திநா,
சதுர்ஜலதிஸம்ப்ருதே ஜகதி ஸூர்யவத் தீவ்யதா
யதீச்வரமஹாத்மநா ஸ பகவான் க்ருதார்த்தீக்ருத:.

கருத்து (யதித்ரயஸதர்மணு) — ஆளவந்தார், எம்பெருமானுர், மணவாள மாமுனிகள் ஆகிய மூவரோடும் ஒப்புச் சொல்லலாயிருக்குமவர் என்றபடி. இது ஜீயர் ஸ்வாமிக்கு விசேஷணம். 1973 என்பதில் (மூன்று) என்கிற லக்கம் இதில் குறிக்கப்பட்டது. அடுத்த விசேஷணத்தில் (ஏழு) என்கிற லக்கம் குறிக்கப் படுகிறது. (ஸூஸத்ருசா ச ஸப்தர்ஷிபி:)— ஸப்தரிஷிகளென்று ப்ரஸித்தர்களான ஏழுமுனிவர்களையும் ஒத்திருப்பவர் நம் ஜீயர் ஸ்வாமி என்றபடி.

இனி (ஒன்பது) என்கிற லக்கம் குறிக்கப்படுகிறது. [நவஸ்துதவ்ருஷாத்ரிராட் சரணபங்கஜைகாந்திநா] ஸ்ரீரங்கநாதன் ஆழ்வார்கள் பதின்மராலும் பாடப் பெற்றவர் ஆகையாலே பதின்மர் பாடும் பெருமாள் என்று போற்றப் படுபவர். திருவேங்கட முடையான் தொண்டரடிப் பொடியாழ்வாரால் பாடப் பெருமையாலே ஒன்பதின்மர்பாடும் பெருமாள் ஆயினர். ஆனதுபற்றி இங்கு [நவஸ்துதவ்ருஷாத்ரிராட்] எனப்பட்டது. ஒன்பதின்மர்பாடிய திருவேங்கட முடையான் என்றபடி. அப்பெருமானுடைய திருவடித் தாமரைகளில் ஒன்றி நிற்பவர் நம் ஜீயர் ஸ்வாமி என்றபடி. எல்லா திவ்ய தேசத்தெம்பெருமான்கள் பக்கலிலும் ப்ராவண்யமிருக்கச் செய்தேயும், திருவேங்கட முடையான் திருவடிகளில் ப்ராவண்யாதிசயம் கொண்டிருக்கிருர் என்பது ஏற்கும். இந்த விசேஷணத்தில் ஒன்பது, ஒன்று, என்ற இரண்டு லக்கங்கள் வந்து விட்டன. ஆக முன்னடிகளில் 1973 என்கிற வருஷ லக்கம் அமைந்ததாயிற்று. இனி உத்தரார்த்தம் [சதுர்ஜலதிஸம்ப்ருதே ஜகதி ஸூர்யவத் தீவ்யதா] நான்கு கடல்களால் சூழப்பட்ட இந்நிலவுலகில் ஸூர்யன் போல் விளங்குபவர் நம் ஜீயர் ஸ்வாமி என்றபடி. இதில் மாத லக்கமும் தேதி லக்கமும் வந்து விட்டது. ஆரம்பமாதம் போலவே க்ரதுவின் அவஸான மாஸமும் நான்காவதே யாதலால், நான்கு கடல் சூழ்ந்த இந்நிலவுலகில் என்று நான்கு என்கிற லக்கம் வந்துவிட்டது. ஸமாப்தி தினத்தில் தேதி 12 ஆகையால், மூன்ருவது பாதமுடிவிலுள்ள ஸூர்யசப்தம் "த்வாதசாதித்யா:'' என்கிற ச்ருதிச் சாயையில் 12 என்கிற லக்கத்தைக் காட்டி நிற்கும். ஸூதர்சன சதகஸமாப்தியில்,

பத்யாநாம் தத்வவித்யாத்யுமணி...." என்கிற ச்லோகத்தில் த்யுமணி சப்தத்தால் 12 என்கிற லக்கத்தைக் காட்டினது போலுமிது.

(யதீச்வரேத்யாதி) ஆக இப்படிப்பட்ட ஜீயர் ஸ்வாமியால் எம்பெருமான் மனோரதங்கள் நிறைவேற்றப்பட்டன வென்கை.

## உபஸம்ஹாரம்

அதச ஸ்ரீமந்நாராயண ராமாநுஜயதீசிதுஸ்ஸவிதே;
அநுபதவர்ஷசிகீர்ஷிதமத்த்வரமதிக்ருத்ய சாத்ய ப்ருச்சாம:.

நம் ஜீயர் ஸ்வாமியினது சிந்தனைகளும் ஸங்கல்பங்களும் ஒரு நாளும் ஓய்வு பெற மாட்டாதவைகளாகையாலே, இதினினும் சீறிய ஒரு மஹாக்ரதுவை அனுஷ்டிக்கத் திருவுள்ளம் பற்றியே யிருப்பர். அது எவ்விதமானது, எப்போது, எவ்விடத்தில் என்பதை பக்தவர்கங்கள் ஸ்வாமியையே கேட்டுணரவேணும். ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:.

## டில்லிமாநகர் வித்வத் ஸம்மேளனத்தில் வித்வான்களின் உபந்யாஸங்கள்.

"ஸ்ரீமதே நாராயணாய நம:" என்கிற மந்த்ர ரத்ன வாக்யத்தில் பத்து அக்ஷரங்கள் இருக்கின்றனவல்லவா? அவ்வக்ஷரங்களில் ஏதேனுமொன்றை முன்னிட்டுக்கொண்டிருக்கிற ஏதேனுமொரு பிரமாணவசனத்தை யெடுத்துக்கொண்டு அதன் பொருளை விவரித்து உபந்யஸிப்பது. (இதற்கு நிதர்சனமாக ஒவ்வொன்று காட்டுகிறோமிங்கு.)

ஸ்ரீ— ஸ்ரீரித்யேவ ச நாம தே பகவதி! ப்ரும: கதம் த்வாம் வயம். (ஆளவந்தார்)
ம — மநு: புத்ரேப்யோ தாயம் வ்யபஜத். (மூன்றாவது காண்டம்)
தே— தேஷாமஸுராணும் திஸ்ர: புர ஆஸந்—ஆறாவது காண்டம்.
நா— நாந்ருக்வேத விநீதஸ்ய நாயஜுர்வேத தாரிண: (ஸ்ரீ ராமாயணம்)
ரா— ராமோ நாம பபூவ ஹூம். (கர்ணாம்ருதம்)
ய — யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த தேவா: (மூன்றாவது காண்டம்)
ணா— ணத்வம் யாதி நகார: யாதி ச ஸகார இதி பஹுலம்.
ய — *யச் ச ராமம் ந பச்யேத் து யஞ்ச ராமோ ந பச்யதி*
ந:— *நமோசிந்த்யாத்புதாக்லிஷ்ட ஜ்ஞாநவைராக்யாசயே*

குறிப்பு:—மேலேகாட்டிய பிரமாண வசனங்களையே கொள்ளவேணுமென்பதில்லை. இது ஒரு எடுத்துக்காட்டு. இவ்வக்ஷரங்களில் ஒன்றை முற்கொண்ட ஏதேனுமொரு வசனத்தை கொள்ளலாம்,



# ஸ்ரீ ஸ்வாமியின் மீனவிசாக மஹோத்ஸவ நிகழ்ச்சி

(தி. அ. குன்றபாக்கம் தி. அ. க்ருஷ்ணமாசார்யர், வித்வான், சிரோமணி)

ஸ்ரீ ராமாநுஜன் 294ல் தெரிவித்திருந்தபடியே ஸ்ரீமதித்யாதிவிசேஷண விசேஷ லக்ஷ்யபூதராய் எழுந்தருளியிருக்கும் ஜகதாசார்யஸிம்ஹாஸநாதீச்வர மஹாமஹோபாத்யாய பெருமாள் கோவில் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சார்ய ஸ்வாமியினுடைய எண்பத்திரண்டாவது திருநக்ஷத்ரபூர்த்தியை முன்னிட்டு ஸ்ரீ காஞ்சியில் ஸ்ரீஸ்வாமிதிருமாளிகையில் பங்குனி 1வ (14-3-73) புதன்கிழமை முதல் பங்குனி 10வ (23—3—73)வெள்ளிக்கிழமை வரையில் திருநக்ஷத்ரோத்ஸவம் நடந்து இனிதே முடிவுபெற்றது. உடனிருந்து அனுபவிக்கும் பாக்யம் படைத்த அடியேன் அதைப்பற்றிச் சிறிது விண்ணப்பிக்க முற்படுகின்றேன்.

முதல் ஒன்பது நாள்களில் காலே 7-30 மணி முதல் 10-30 வரையில் முறையே முதலாயிரமும் பெரியதிருமொழியும், மாலே 7-30 மணி முதல் 10 வரையில் இயற்பாவும் திருவாய்மொழியும், திருநக்ஷத்ர நன்னாளாகிய 10வது நாளில் காலே இராமாநுச நூற்றந்தாதியும் உபதேசரத்தினமாலேயுமாக ஸேவித்துச் சாத்துமுறை செய்யப்பட்டது. ஏறக்குறைய ஐம்பது நாலாயிர அத்யாபகஸ்வாமிகள் பெருமிடறு செய்து ஸேவித்துத் தாங்களும் ஆனந்தித்துப் பிறரையும் ஆனந்தக்கடலில் திளேக்கச்செய்தருளிய பெருமை வாசாமகோசரம். அருளிச்செயலில் ஈடுபட்ட ஸ்வாமிகள் யாவதாத்மபாவியாக இவ்வருளிச் செயல் ஸேவையைக்கேட்கும் பாக்யம் வாய்க்கப் பெற்ருல் மோக்ஷானந்தம் கிடைத்தாலும் அது வேண்டாமென்று பேசிக்கொண்டிருந்தவர். "பச்சை மாமலேபோல் மேனி பவளவாய் கமலச்செங்கண், அச்சுதா அமரரேறே ஆயர்தம் கொழுந்தே என்னும், இச்சுவைதவிர யான்போய் இந்திர லோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன். அரங்கமாநகருளானே" என்றிறே தொண்டரடிப் பொடிகளும் அருளிச்செய்தது.

பத்து நாள்களிலும் பின்மாலேயிலும் மாலேயிலும் திருவீதி ப்ரதக்ஷிணரூபமாக மூன்று மணி காலமும் பகல் இரண்டு மணி முதல் ஐந்து மணி வரை மூன்று மணிகாலமுமாக வேதபாராயண ஸ்வாமிகளால் அசீதித்வயமும் பாராயணம் செய்து பூர்த்திசெய்யப்பட்டது.

ஒவ்வொரு நாளும் பகலிலும் இரவிலும் திவ்யப்ரபந்தஸேவையும் ஸ்தோத்ர பாடாநுஸந்தாநமும் முடிவு பெற்ற பின்பு ஏறக்குறைய ஒரு மணிகாலம் ஸ்ரீஸ்வாமி தமது வ்யாக்யானவாசஸ்பதி என்னும் பிருதத்திற்கு ஏற்ப, பக்வமான ஞானத்தின் பரீவாஹரூபமாக மதுர கம்பீரமான திருமிடற்றொலியில் ஸாதித்த உபந்யாஸங்களேக் கேட்கப் பெற்றவர் மஹாபாக்யசாலிகளென்னத் தடையேதுமில்லே. ஒவ்வொரு உபந்யாஸமும் தேனும் பாலும் கன்னலும் அமுதும் போலே தித்தித்திருந்ததேயாகிலும், திருக்கச்சிநம்பியும் பேரருளாளனும், ஒழிவில் காலப்பாசுரத்தில் அர்த்தபஞ்சகம், கத்யத்ரயத்தின் பெருமை, ஐந்தாம்பத்தில் ஒவ்வொரு பதிகத்திலும் முக்யமான பாசுரங்கள், திருவாய்மொழியும் பகவத்கீதையும், அநாவ்ருத்தி: சப்தாத் என்ற ப்ரஹ்மஸூத்ரத்திற்கு மற்றபாஷ்யங்களேவிட பகவத்ராமாநுஜ பாஷ்யத்துக்குள்ள பெருமை என்னும் தலேப்புகளில் ஸ்ரீஸ்வாமி அருளிய உபந்யாஸங்களின் போக்யதை பேச்சுக்கு நிலமல்ல என்பதை நேராகக் கேட்டு அநுபவித்த

ரஸிக வித்வான்கள் நன்கறிவர். கடைசியாகத் திருவிசாகத்தன்று இரவில் நம்மாழ்வார் ஸந்நிதியில் ஸ்ரீஸ்வாமி — பங்குனி மாதம் பெரிய பிராட்டியார் திருவவதாரம் செய்த மாதமாகையால் திருவாய்மொழி பத்துப் பத்துக்களிலும் பெரிய பிராட்டியாரைப் பற்றிய பாசுரங்களை எடுத்துக் கொண்டு பரக்க உபந்யஸித்த பாங்கு உண்டே, அது இன்னும் அடியேனுடைய செவிகளில் ஒலித்துக் கொண்டே இருக்கிறது. திவ்யப்ரபந்தம் ஸேவிக்கும் போதும் உபந்யாஸம் செய்தருளும் போதும் ஸ்ரீஸ்வாமியை நேரில் ஸேவித்தவர் 'பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட எங்களிராமாநுசமுனிவேழம்' என்றபடி நம் ஸ்வாமி எம்பெருமானார் போல் ஒரு மத்தகஜமே என்று கொண்டாடினர்.

இது தவிர ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி பெரியஜீயர் ஸ்வாமிகள் இரண்டு மூன்று நாள்களில் ஸ்ரீஸ்வாமியின் பெருமையைப் பரக்கப்பேசி மங்களாசாஸனம் செய்தருளினர். மேலும் இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்நாள்களில் ஒருநாளையாவது ஸ்ரீஸ்வாமிக்கு ஸமர்ப்பித்தால் எம்பெருமானும் அதை அங்கீகரிப்பானாகையால் ஸ்ரீஸ்வாமி இன்னும் எத்தனையோ நூற்றாண்டுகள் இவ்வுலகில் எழுந்தருளியிருந்து லோகோபகாரக பஹுக்ரந்தநிர்மாணங்களாலும் உபந்யாஸங்களாலும் இருள்தருமாஞாலம் தெருள்தருமாஞாலமாக மாறும்படி செய்தருளவேணுமென்று தம்முடைய பேராவலை வெளிப்படுத்தியருளினர்.

திருவல்லிக்கேணியிலிருந்து ஸ்ரீமதுபயவே அட்வொகேட் சம்பசேசு ஐயங்கார்ஸ்வாமியும் அவரது ஜ்யேஷ்ட திருக்குமாரரும் ஸ்ரீமதுபயவே C. S. பார்த்தஸாரதி ஐயங்கார் (B. A. B. L.) ஸ்வாமியும் 8ம் நாள் காலை எழுந்தருளியிருந்து நம்ஸ்வாமியைப்பற்றி தங்களுடைய திருவுள்ள உகப்பை அபரிமிதமாக அருளிச்செய்தார்கள். விசேஷித்து ஸ்ரீபார்த்தஸாரதி ஐயங்கார் ஸாதித்ததாவது:— "இதுவரையில் நம் ஸ்வாமி இயற்றிவெளியிட்டுள்ள பலநூற்றுக்கணக்கான நூல்களில் தற்போது துர்லபமாயிருப்பவற்றை எல்லாம் மறுபதிப்புச் செய்விக்க ஏற்பாடுசெய்யவேண்டியது மிகவும் அவச்யம்" என்று.

சென்னை அட்வகேட் ஸ்ரீமதுபயவே. பிள்ளைபாக்கம். பஹுகுடும்பி. அனந்தாசாரியர் ஸ்வாமியும் ஸ்ரீ T. A. திருவேங்கடாசார்யர் ஸ்வாமியும் ஒருநாள் எழுந்தருளியிருந்து கோஷ்டியை அலங்கரித்தார்கள். பிள்ளைலோகம் ஸ்ரீமான் தலசயனத்துறைவார்ஸ்வாமி மணவாளமாமுநிகள் அருளிய உபதேசரத்தினமாலையின் ப்ரதிபாத்யங்களான ஸாரார்த்தங்களை நன்கு உபந்யஸித்தார். திருப்பாப்புலியூர் அட்வொகேட் ஸ்ரீ. உ. வே. ராமாநுஜாசார்ய ஸ்வாமி ஸ்ரீஸ்வாமியின் வைபவத்தைப் பரக்கப்பேசி, ஸ்ரீஸ்வாமிக்கு இரண்டு வேதங்களும் இரண்டு கண்களென்றும் தத்ராபி ஸம்ஸ்க்ருதவேதம் வலக்கண் என்றும், தம்முடைய நிலையை ஸ்ரீஸ்வாமியினுடையதாக மிகவும் ரஸமாக உபந்யாஸம் செய்தருளினர். ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் ஸ்ரீமான் எச்சூர் ஸுந்தராசார்யஸ்வாமி ஸ்ரீஸ்வாமியின் பரபக்ஷப்ரதிக்ஷேபத்துறையில் மிகவும் ஈடுபட்டு அழகாகச் சொற்பொழிவாற்றினர். ஸ்ரீமான் K. B. தேவராஜனென்பவர் (B.SC) மாயனை மன்னுவடமதுரைமைந்தனை என்று தொடங்கும் ஆண்டாள் பாசுரத்தை ஸ்ரீஸ்வாமிபரமாக நிர்வகித்துப் பரக்கப் பேசினர். அடியேனும் ஸ்ரீஸ்வாமி ஆசார்யோபதேசத்தாலும்

தமக்கே அஸாதாரணமான ப்ரதிபையினாலும் வாரிவழங்கியிருக்கும் அர்த்தங்களில் பெருகுமா தவேழம் என்று தொடங்கும் பூதத்தாழ்வார் பாசுரத்தினுடையவும், தன் குருவின் தாளிணைகள் என்று ஆரம்பிக்கும் மணவாளமாமுனிகள் பாசுரத்தினுடையவும் வ்யங்க்யார்த்தங்களை விவரித்து ஸ்ரீஸ்வாமி பூர்வவ்யாக்யாதாக்களைக் காட்டிலும் சிறந்தவர் என்று தோன்றியதை விண்ணப்பித்து ஸ்வரூபம் நிறம் பெற்றேன்.

## வைதிக லௌகிக வித்வத்ஸபை

திருநக்ஷத்திரத்திற்கு முன்னாள் (22—3—73) மாலை 4 மணியிலிருந்து 7 மணி வரையில் வைதிகலௌகிக வித்வத்ஸபை கூடிற்று. வைதிகஸபைக்கு ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி பெரிய ஜீயர்ஸ்வாமி அத்யக்ஷபதவியை அலங்கரித்தருளினார். லௌகிகஸபைக்கு சென்னை உயர்நீதிபதி உயர்திரு. N. கிருஷ்ணஸாமி ரெட்டியாரவர்கள் அக்ராஸனம் வஹித்தார்.

———

அப்போது ஸ்ரீமத்பரமஹம்ஸ பெரிய ஜீயர்ஸ்வாமியின் ஆத்யக்ஷ்யத்தில் நடந்த வைதிகஸதஸ்ஸில் ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீ. உ. வே. தேசி ரங்கராமாநுஜாசார்யஸ்வாமி 'உருமையோடே உற்றேனுக்கா தொழிந்தது' என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணிகையைப் பற்றியும், ஸ்ரீ. உ. வே பிள்ளைலோகம் பாஷ்யகாராசார்ய ஸ்வாமி 'நமஸ்தே ஹஸ்திசைலேச' என்ற திருக்கச்சிநம்பிகளின் ச்லோகத்தில் ஆத்தபஞ்சகத்தைப் பற்றியும் ஸபையோர் மனமகிழ உபந்யஸித்தனர். சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் உயர்திரு N. கிருஷ்ணஸாமி ரெட்யாரவர்களின் தலைமையில் நடந்த லௌகிகஸபையில் ஸ்ரீஸ்வாமியின் அபிமானத்திற்கு அத்விதீயபாத்ரபூதரான எழும்பூர் அட்வொகேட் ஸ்ரீமான் R. V. சேஷாத்ரி அய்யங்கார் ஸ்வாமி (மகாவாக்மி) ஸ்ரீஸ்வாமியின் பாண்டித்யப்ரகர்ஷத்தையும் குணாதிசயங்களைப் பற்றியும் மிகவும் அபினந்தனம் செய்து உபந்யஸித்தனர்.

திருநக்ஷத்ரோத்ஸவாரம்பமே தொடங்கி நம் ஸ்ரீஸ்வாமியின் மீது மிகப் பரிவு கொண்ட ஸ்ரீமத்பரமஹம்ஸ காஞ்சீ அழகிய மணவாள யதீந்த்ரப்ரவண ராமாநுஜஜீயர்ஸ்வாமியும், பிறகு ஸ்ரீமத்பரமஹம்ஸ திருமலை திருப்பதி பெரிய ஜீயர்ஸ்வாமியும் சிறிய ஜீயர்ஸ்வாமியும், கடைசியில் ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர்ஸ்வாமியுமாக உத்தமாச்ரமிகள் நால்வர் கோஷ்டியை அலங்கரித்ததும், ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் ஜகத்குரு காதி. க்ருஷ்ணமாசார்யஸ்வாமி சிற்சில நாள்களில் திருநக்ஷத்ரோத்ஸவ கோஷ்டியை அலங்கரித்ததும் இவ்வுத்ஸவத்திற்குச் சிறந்த அம்சமாகும். ஸ்ரீ ராஜமன்னார் ஸன்னதி தர்மகர்த்தா ஸ்ரீமான். உ. வே. சேரங்குளம், K. R. ராஜகோபாலையங்கார் ஸ்வாமியும் நாலைந்து நாள் எழுந்தருளியிருந்தார்.

ஸ்ரீஸ்வாமியினிடம் பரமபக்திபூண்டவர்களான ஸ்ரீமான் A. ஸ்ரீனிவாஸையங்கார், (Free India Editor) D. கிருஷ்ணமூர்த்தி, M. A. சிங்கராசார்ய ஸஹோதரர்கள், V. N. தேவநாதன், A. V. கன்னைய நாயுடு, C. ஸோமஸுந்தரராவ்,

C. சுப்பராயலு செட்டியார், வூரா. ஜகன்னுதம் செட்டியார், முதலிய பல பெரிய வர்கள் வந்திருந்து தாம் கொண்ட ஆனந்தமும் காட்டிய அபிமானமும் பேச்சுக்கு நிலமன்று.

திருநக்ஷத்ரத்தன்று மாலை 5.30 மணியளவில் ஸ்ரீஸ்வாமி நூற்றுக்கணக்கான உபயவேதபாராயண ஸ்வாமிகள் புடைசூழ அலையாருங்கடல்போல் முழங்கித் திருவீதிகளில் நடத்தியருளிய ஸ்தோத்ரபாட கோஷ்டியின் காம்பீர்யம் எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் மறக்கற்பாலதன்று.

இங்ஙனம் எழுந்தருளியிருந்து இவ்வுத்ஸவத்தைச் சிறப்பித்த எல்லா ஸ்வாமிகளுக்கும் திருநக்ஷத்ரோத்ஸவம் கண்டருளும் ஸ்ரீஸ்வாமி எம்பெருமான் தமக்கு ஸங்கல்பித்த சக்திக்கும் மேற்பட உலகோர் உகக்கவும் வியக்கவும் ஸம்பாவணைகளை ஸமர்ப்பித்தார். பிறகு இத்தனை ஸ்வாமிகளும் தம்முடைய ப்ரார்த்தனையை மிகையாகக் கொண்டு தம்பேருக எழுந்தருளியிருந்து கோஷ்டியைச் சிறப்பாக நடத்திக் கொடுத்ததற்கும் "யத் மநீஷிபதாம்போஜரஜ:கணபவித்ரிதம், ததேவ பவநம், நோ சேத் பகாரஸ் தத்ர லுப்யதே" (= எந்த வீடு ப்ரஹ்மவித்துக்களான தொண்டர்களின் திருவடித்தாமரைகளிலுள்ள சிறு தூளியினுல் புனிதமாக்கப்பட்டதோ அதுவே பவநமெனப்படும். இல்லையேல் அச்சொல்லைவிட்டு பகாரம் நீங்கும் = அது வனமாகுமேயன்றி பவனமாகாது) என்கிறபடியே இவ் வீட்டை வனமாக்காமல் பவனமாக்கியதற்கும் ஆண்டாளருளிச்செய்தபடியே "தலையல்லால் கைம்மாறிலேனே" என்று கூறி எல்லா ஸ்வாமிகளையும் தண்டம் ஸமர்ப்பித்துக் கண்ணுங் கண்ணீருமாய்க் கைகூப்பிநின்று வாசலளவும் எழுந்தருளி எல்லோரையும் வழியனுப்பியருளினர்.

மதுரேண ஸமாபயே—ஸ்ரீஸ்வாமியின் எல்லாப் பெருமைக்கும் சிகரமான பெருமையாக அமைந்தது—ஜாமாதாக்களிருவருடையவும் பௌத்ர தௌஹித்ரர்களிருவருடையவும் திருக்குமாரரொருவருடையவும் ஸஹயோக ஸௌமநஸ்யங்கள். பரம ஸத்த்வ ஸமாச்ரயர்களான ஸ்ரீமதுபயவே. அக்காரக்கனி ஸம்பத்குமாராசார்யஸ்வாமி, மணவாள திருமலாசார்ய ஸ்வாமியாகிய ஜாமாதாக்களிருவரோடும், சிரஞ்சீவி ப்ர. ராஜஹம்ஸன் சிரஞ்சீவி மணவாள. ராஜமணி, சிரஞ்சீவி தி. அ. அனந்தாழ்வானென்னும் பௌத்ர – தௌஹித்ரர்களோடும் கூடித் திருக்குமாரரான ஆயுஷ்மான் ஸ்ரீரங்கநாதாசார்பர் (செல்வமணி) சிறிய காரியம் தொடங்கிப் பெரியகாரியமாகிய ததீயாராதனமீருகவுள்ள எக்காரியத்திலும் குறை சிறிதுமின்றி இம்மஹோத்ஸவத்தை நிர்வஹித்த அதிசயம் ஒவ்வொருவருடையவும் நெஞ்சை விட்டகலாதது. இப்படி எத்தனையோ பங்குனித்திருவிசாகங்களைக் காணக்கடவோமென்றே ஒவ்வொருவரும் பேசும்படியிருந்தது. பொலிக பொலிக பொலிக.

சுபம்

## 38. உண்ணுஞ்சோறு பருகுநீர்...எல்லாம் கண்ணன்

இப்பதிகம் (திருவாய்மொழி 6-7) தாய் பாசுரமாக அவதரித்தது. தாய் பாசுரமாக வைத்துப் பேசுபவர் ஆழ்வாரே யாதலால் தம்முடைய படியைத் தாமே தெரிவிப்பதாகும். ஆசார்யஹ்ருதயத்தில் வ்யாஸ பராசராதி மஹர்ஷி களுக்கும் ஆழ்வார்க்குமுள்ள வாசியை விரிவாக அருளிச்செய்து வருமிடத்து "அவர்களுக்குக் காயோடென்னு மிவையே தாரகாதிகள்; இவர்க்கு எல்லாம் கண்ணனிறே" என்றருளிச்செய்த சூர்ணையை உரையுடன் இங்கு அநுபவிப்பது. இங்கே ஆக்ஷேப ஸமாதானம் குறிக்கொள்ளத்தக்கது. உண்ணாத சோறு முண்டோ? பருகாத நீருமுண்டோ? தின்னாத வெற்றிலையு முண்டோ? எதற்காக இந்த அடைமொழிகள் கொடுப்பது? பாதபூரணத்திற்காகவா? என்று சிலர் கேட்கலாம். வ்யாக்யானத்திலுள்ள அழகைக் காட்டுகின்றோம். சோறு எப்போதும் உண்ணுஞ்சோறாகவிராது. வயிறு நிறைய உண்டவனுக்கு தேவாம்ருதம் கிடைத்தாலும் அது உபேக்ஷணீயமாகவே யிருக்கும். கங்கைக் கரையி லுள்ளவனுக்குக் குளத்துநீர் அநபேக்ஷிதமா யிருக்கும். வாய்நிறைய வெற்றிலையைக் குதப்பியுள்ளவனுக்கு வேறு வெற்றிலை தின்னும் வெற்றிலையாக இராது. ஆகவே "உண்ணுஞ்சோறு" என்றது பசித்தவன் விரும்பியுண்ணுஞ்சோறு என்றபடி. 'பருகும் நீர்' என்றது பாலைவனத்தில் திரிந்து நாக்கு ஒட்டிப்போனவன் விரும்பிப் பருகும் நீர் என்றபடி. 'தின்னும் வெற்றிலை' என்றது நாவில் பசையற்று வறண்டு கிடப்பவன் விரும்பித்தின்னும் வெற்றிலை என்றபடி. ஆழ்வார் எம்பெருமானை அநுபவிப்பது இவ்வகையிலேயாம்.

## 39. உடையவரின் கீதாபாஷ்யத்தினழகு (ப்ராஸங்கிகம்)

கீதையில் ஏழாமத்யாயத்தில் 'வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:' என்றவிடத்து 'வாஸுதேவஸ் ஸர்வம்' என்றதற்கு சங்கரபாஷ்யத்தையும் நம் ஸ்வாமி பாஷ்யத்தையும் உற்று நோக்கவேணும். *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்பதற்கு சங்கரர் பணித்த பொருள் *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* இத்யாதி ஸ்தலங்களில் போலவே அத்வைத மாகவுள்ளது; 'வாஸுதேவ ஏவ மம ஸர்வம்' என்பதாகக் கொள்ளப் படவேயில்லை. பரப்ரஹ்மத்திற் காட்டில் வேறுபட்ட பொருள் எதுவுமே யில்லையாகையாலே, எல்லாம் ப்ரஹ்மமேயென்று கொண்டு என்னைப் பணி கின்ற மஹாத்மா துர்லபன்-என்று கீதாசார்யன் சொல்லுவதாக சங்கர பாஷ்ய ப்ரக்ரியை. இதை நமது பாஷ்யகாரர் கண்டித்திருக்கிறாரென்பது "வாஸுதேவஸ் ஸர்வமித்யஸ்ய அயமேவார்த்த:" என்கிற ததீயபாஷ்ய ஸூக்தியாலும், "வாஸு தேவஸ்ஸர்வமிதி ஸாமாநாதிகரண்யஸ்ய பராபிமதமர்த்தம் ப்ரதிக்ஷிபந் ஸ்வோக்தம் த்ரடயதி-வாஸுதேவ இதி" என்கிற தாத்பர்யசந்த்ரிகாஸூக்தியாலும் அறிய வெளிது. இங்கு சங்கரர் பணித்த பொருளானது அவசியம் கண்டிக்கத்தகுந்தது தானேயென்று பார்க்கவேணும். ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யார்ஹத்வரூபவஸ்து பரிச்சேதராஹித்யத்தை ப்ரஹ்மத்தினிடத்தில் விசிஷ்டாத்வைதிகளான நாமும் இசைந்தே யிருக்கிறோம். தாத்பர்யநிர்வாஹத்தில் வாசியேயொழிய சப்தஸந்தர்ப்

பத்தில் ஒரு வாசியுமில்லை நமக்கும். இங்கே சங்கரர் எழுதிவைத்த பொருள் அஸம்பாவிதமன்று. *ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ்ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்* என்கிற வடமொழி வேதத்தையும், *அவனே யவனுமவனுமவனும், அவனே மற்றெல்லாமுமறிந்தனமே* என்கிற தமிழ் வேதத்தையும் நிர்வஹிக்கிற ரீதியிலே *வாஸுதேவஸ் ஸர்வமென்கிற விதையும் எளிதாக நிர்வஹிக்கலாமாயிருக்க இங்கே கண்டனம் அவச்யமன்றேயென்று ப்ரத்யவஸ்தாநம் ப்ராப்தமாகும்.

சங்கரருடைய அத்வைதாபிப்ராயத்தை ஸ்வாமி கீழே வெகு விரிவாகக் கண்டித்தே யிருக்கிறார். [2-12 பாஷ்யம் ஸேவிப்பது. 13-2 பாஷ்யத்திலும் மிகமிக விரிவாக ஸேவிப்பது.] அதை இங்கும் கண்டிக்கவேண்டிய அவச்யமில்லைதான். இங்குக் கண்டிக்கிற விதம் வேறு. இவ்வர்த்தம் இந்த ப்ரகரணத்திற்குச் சேராதென்று திருவுள்ளம்பற்றியே இவ்விடத்தில் ப்ரதிக்ஷேபமுள்ளது. இங்கே ஸ்வாமியருளிச்செய்த பொருள் என்னவென்று பார்ப்போம். 'வாஸுதேவஸ் ஸர்வ' மென்பதற்கு ஸ்வாமியருளிய பொருள் இதுவே—வாஸுதேவ ஏவ மம பரமப்ராப்யம் ப்ராபகஞ்ச, அந்யதபி யந்மநோரதவர்த்தி ஸ ஏவ மம தத் ஸர்வம்'' என்பது கீதா பாஷ்யஸூக்தி. இதை தாத்பர்ய சந்த்ரிகையில் விவரிக்கும்போது தாரகபோஷக போக்யங்களும் எம்பெருமானே யென்று கொள்ளுகிற மஹாத்மாவை விவக்ஷிப்பது தான் இவ்விடத்திற்குச்சேரும்-என்று ஸ்பஷ்டமாக எழுதியுள்ளார். திருவாய் மொழியில் *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்* என்று ஆழ்வாரருளிச்செய்தது *வாஸுதேவஸ்ஸர்வமென்கிற இத்தையநுஸரித்தேயென்று ஆளவந்தார் முதலானோர் நிர்வஹித்து வந்தார்கள். திருவாய் மொழியின் வ்யாக்யாதாக்களான பூர்வாசார்யர்களும் அங்கு இந்த கீதாவசனத்தை யுதாஹரித்தே வியாக்கியானம் செய்தருளியுள்ளார்கள். சங்கரருக்குத் திருவாய் மொழியில் ப்ரவேசமில்லாமையாலே அவர்தாம் வேறு வகையாக பாஷ்யமிட்டாலும் திருவாய்மொழியமுதக் கடலிலே ஆழ்ந்தவரான ஸ்வாமி அவ்வர்த்தத்தை எங்ஙனே இசையக்கூடும்? *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்று சொல்லுகிற கீதாசார்யனும் நம்மாழ்வாரை நெஞ்சில் கொண்டே அது சொல்லியிருக்க, அதற்கு இணங்காத பொருள் ஸ்வாமிபாஷ்யத்தில் எப்படி இடம் பெறும்? அப்பொருளை ஸ்வாமி எப்படி ஸஹிப்பர்? தமக்கு *எல்லாங் கண்ணனென்று சொல்லுகிற மஹாத்மாவாகிய நம்மாழ்வார், அந்தோ! என் கண்ணுக்குக் கிடைக்கவில்லையே யென்று அழுதுகொண்டே யன்றோ கீதாசார்யன் இந்த ச்லோகம் பணித்தான். கண்ணன் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளின பின் சிலநாளிலே ஆழ்வாருடைய திருவவதாரம். கண்ணபிரான் ஆழ்வாரை ஸேவித்துவிட்டுத் தன் அவதார ஸமாப்தியைச் செய்துகொள்ள மிகவும் ஆசைப்பட்டிருந்தான்; அந்த பாக்யம் அவனுக்கு துர்லபமாயிற்று; அது இந்த ச்லோகத்தில் *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்பதனாலே ஸூசிதமாகிறது—என்று ஆசார்யர்கள் நிர்வஹித்துப்போருவது ஸோபபத்திகமென்று கீதாபாஷ்ய ஸூக்திகளாலறிகிறோம். ஆக, 'ஜகத் ஸர்வம் வாஸுதேவ:' என்பதாக சங்கரர் கொண்டார்; அங்ஙனன்றிக்கே 'மம ஸர்வம் வாஸுதேவ:' என்பதாக நம் ஸ்வாமி கொண்டார். இதுதான் திருவாய்மொழிக்குச் சேர்ந்ததும், திருவாய்மொழியிலிருந்து தெரிந்து அருளிச் செய்யப்பட்டதுமான மிகச்சிறந்த பொருள் என்று தெளிவிக்கப்பட்டதாயிற்று.

## 40. உப்பானுலுமவன் கொடுப்பன்

உலகில் பாஷைகள் பல. அந்தந்த பாஷைகளில் கவிதைகள் தோன்றியுள்ளன. மணிப்ரவாள பாஷையென்பது ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் தோன்றியுள்ளது. ஆழ்வார்களருளிச் செய்தவை வெறுந்தமிழ். ஆசாரியர்களருளிச் செய்த ஸ்ரீபாஷ்யாதிகளும் ஸ்தோத்ரங்களும் வெறும் ஸம்ஸ்க்ருதம். திவ்யப்ரபந்த வியாக்கியான ரஹஸ்யாதிகள் வடமொழியும் தென்மொழியும் விரவிய மணிப்ரவாளநடை. வசனநடையிலமைந்துள்ள மணிப்ரவாள நூல்களையே பெரும்பாலும் அநுபவித்து வருகிறோம். மணிப்ரவாள ச்லோகங்களுமுண்டு. அவை கர்ணாம்ருதமாயிருக்கும். கற்கண்டும் பாலும் கலந்தாற்போலே யிருக்கும். அவற்றுள் ஒன்று கேளீரிங்கு. "உப்பானுலுமவன் கொடுப்பனிதி நான் நப்பாசையால் கிட்டினேன், துப்பாமல் ஸது மாம் த்ருணய கலயந் அப்பால் வ்ரஜேத்யப்ரவீத், இப்பாலெங்கு திரிந்துமில்லை யெனவே தப்பாத சொல் பெற்றனன், அப்பா! வாமனனே மஹாபலிமகே எப்பாடு நீ பட்டையோ?" இதன் பொருள் எளிதாகத் தெரிந்ததே. [இந்நூல் என்னுயுள்வரை என்றும் முடிவுபெற மாட்டாததாகையாலே இங்ஙனேயுள்ளவை மேன்மேலும் பலபல வெளிவரும்.]

## 41. உத்தமர் கோவிலின் உத்தம விசேஷம்

திருவரங்கம் பெரிய கோயில் ஸமீபத்தில் உத்தமர் கோயில் என்பது ஒரு திவ்யதேசம். அத்திருப்பதிக்குக் கரம்பனூர் என்று திருநாமம். திருமங்கையாழ்வார் ஒருவருடைய பாடலே அதற்குள்ளது. பெரிய திருமொழி(5-6-2)'கரம்பனூருத்தமனை' என்பதாம் அது. சில திவ்யதேசங்களில் புருஷோத்தமன் என்று திருநாமங் கொள்வது போல அத்தலத்தெம்பெருமான் உத்தமன் என்றே திருநாமங் கொண்டார். 'உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேதி உதாஹ்ருத:' என்பது கீதை. எம்பெருமானை உத்தமனென்றால் எதனாலுத்தமனென்று கேள்வி பிறக்குமோ? கேள்வி பிறவாது. இங்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தில் அருளிச் செய்யும் ஸ்ரீஸூக்தியாவது-'வழிக்கரையிலே திருவாசலுக்கு ஒரு கதவிடாதே வந்துகிடக்கிறவனை' என்பது. இதன் தாற்பரியமென்னவென்றால், அக்காலத்தில் அந்த ஸன்னிதிக்கு உபபத்தியின் குறைவினால் கோபுர வாசலுக்குக் கதவு திருப்பணி ஏற்படாமல் எப்போதும் திறந்தபடியாகவேயிருந்தது. யாரும் உள்ளே எளிதாக நுழையலாமன்றோ? இதை அர்ச்சாவதார ஸௌலப்யத்தின் எல்லையாகத் திருவுள்ளம்பற்றிய பெரியவாச்சான்பிள்ளை ரஸோக்தியாகத் 'திருவாசலுக்குக் கதவிடாதேயிருக்கிற ஸௌலப்யத்தினால் உத்தமன்' என்று ஸாதித்தபடி. இச்சுவையை அறியகில்லாத அரும்பதவுரைகாரர் ஒருவர் 'எல்லாரும் நடக்கிற வழியாகையாலே ஸேவிப்பார் மிகுகையால் கதவிட அவஸரமில்லை என்று கருத்து' என்று எழுதிவைத்தார். இது மிகவும் விரஸமானது என்று அஸ்மதாசார்யர் குறிப்பாக அருளிச் செய்தபடி.

## 42. உயிருண்டாகும் வகையுண்டோ

இது கம்பராமாயணத்தில் ஒரு செய்யுளின் முடிவு. இராமபிரான் பிராட்டியைப் பிரிந்து வனத்தில் பரிதபிக்கும்போது அந்த பரிதாப வகைகளை வான்

மீகி சொன்னது ஏகதேசம். கம்பர் வெகுவிரிவாகக் கூறியுள்ளாரதனை. இச் செய்யுள் கேண்மின். 'வெள்ளஞ்சிலம்பும் பாற்கடலின் விரும்புந் துயிலை வெறுத் தளியுங் கள்ளுஞ் சிலம்பும் பூங்கோதை காதற் கடலிற் படிவாற்குப் புள்ளுஞ் சிலம்பும் பொழில் சிலம்பும் புனலுஞ் சிலம்பும் புனைகோதை உள்ளுஞ் சிலம்பும் சிலம்பாவால் உயிருண்டாதும் வகையுண்டோ?' இங்குச் சிறிது கேண்மின். வான்மீகிக்கும் கம்பர்க்கும் ஒரு வாசியுள்ளது. வான்மீகி இராம பிரானை ஒரு மனிதனாகவே வைத்துத் தமது நூலை முடித்துள்ளார். ஆனாலும் ஸமுத்ரசரணாகதிப்ரகரணத்தில் 'புஜை: பரம நாரீணாம் அபிம்ருஷ்டம் அநேகதா' என்பது போன்ற சிற்சிலவிடங்களில் மட்டும் இராமன் ஸாக்ஷாத் நாரா யணமூர்த்தி என்பதை வ்யங்க்யமாகக் காட்டியுள்ளார். கம்பர்பெருமான் அங் ஙனன்றிக்கே ராமன் நாராயணமூர்த்தி என்பதை வ்யக்தமாகவே அடிக்கடி காட்டியருளுவார். இச்செய்யுளில் முதலடியையும் இரண்டாமடியையும் உற்று நோக்க வேணும். பாற்கடலில் அமர்ந்திருந்தவர் பிராட்டியுடைய காதற்கடலிலே அமர்ந்தார் என்று சொல்லியிருக்குமழகு ரஸிக்கத்தக்கது. க்ஷீரார்ணவ நிகேதந ரான நாராயணனே இராமனாகத் திருவவதரித்து ஸீதாபதியானான் என்பதை விளங்கக் காட்டினாராயிற்று. பின்னடிகளின் அமைப்பு மிக்க சுவை மிக்கது. அதில் 'உயிருண்டாகும் வகையுண்டோ?' என்கிற விடத்தை என்னுடைய மாதாமஹரான அழகியமணவாள ஜியர் ஸ்வாமி எனக்குப் பாடம் சொல்லும் போது அரைமணிகாலம் அழுதுகொண்டேயிருந்தார். அது இன்றைக்கு அறுபத்தாறு வருஷமாகிறது.........

## 43. உருமாறிப்பலபிறப்பும்

திவ்யகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்காருடைய திருவரங்கர் ஊசற்பாவில் இது ஒரு செய்யுள். திவ்யகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் திருச்சியில் ஒரு ஜமீன்தாரிடத்தில் வேலை பார்த்து வந்தார். ஒரு ஸமயம் (ஐப்பசி மாதத்தில்) ஸ்ரீரங்கநாதனுக்கு ஊஞ்சலுத்ஸவம் நடந்து கொண்டிருக்கிறது. ஐயங்கார் உடனிருந்து ஸேவிக்க முடியாமல் காரியநிர்ப்பந்தத்திலிருந்தார். இவருடைய நினைவெல்லாம் அந்த உத்ஸவத்திலேயே அமர்ந்திருந்தது. அதனால் ஜமீன் தாருக்கு ஏதோ கணக்கெழுதுகிற வ்யாஜங் காட்டி ரங்கநாதனுடைய ஊசல் நூலொன்று எழுதினர். அதில் முதற்பாட்டு 'உருமாறிப்பலபிறப்பும் பிறந்தும் செத்தும் ஊசலாடுவதடியேன் ஒழியும் வண்ணம் கருமாயத் தென்னெஞ்சைப் பலகையாக்கிக் கருணையெனும் பாசத்தைக் கயிருப்பூட்டி மருமாலைத் துளவசைய வாடிரூசல் மணிமகரக் குழையசைய ஆடிரூசல் திருமாது புவிமா தோடாடிரூசல் திருவரங்கராசரே யாடிரூசல்' என்பது. இதிலுள்ள சமத்காரம் மிக வியக்கத்தக்கது. ஸ்ரீரங்கநாதா! ஊசலுத்ஸவம் உனக்குக் கதாசித். எனக்கோ அது நிச்சலும் நடந்துகொண்டிருக்கிறது. ஊசலாவது அப்படியும் இப்படியும் அசைவது தானே! நான் அநுபவிக்கும் ஊசலாவது உருமாறிப் பல பிறப்பும் பிறந்தும் செத்தும் போருகை; "ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:, ஜீவே துக்காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே." என்கிற ப்ரமாண வசனத்தை நினைப்பூட்டினாராயிற்று.

# திருமலை அனந்தாண்பிள்ளை குன்றபாக்கம் கல்யாணியம்மாவின் மறைவு

(பிர. அ.)



என்னுடைய பிதாமஹருடை ஸஹோதரர்கள் நால்வர். அவர்களில் இருவர் திருப்பதியில் இரண்டு ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமிகளின் திருமாளிகைகளுக்கு ஸ்வீகாரமாகிச் சென்றனர். ஒரு திருமாளிகை ஸ்வாமிக்கு திருக்குமாரர்கள் ஐவர். மற்றொருதிருமாளிகை ஸ்வாமிக்கு திருக்குமாரர்கள் நால்வர். அவர்களில் நாலாமவர் திருமலை திருப்பதி ப்ரதிவாதிபயங்கரம் கோவிந்தாசார்ய ஸ்வாமி என்று ப்ரஸித்தராயிருந்தவர். திருமலை திருப்பதியில் வித்வத்ஸார்வபௌமராக எழுந்தருளியிருந்த

ஸ்ரீமதுபயவே திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமியின் திருத்தமையனுரான ஸ்ரீ பங்காராசார்யஸ்வாமியின் ஜாமாதாவாக இருந்தார் அந்த கோவிந்தாசார்யஸ்வாமி. அவருடைய அரும்புதல்வி கல்யாணியம்மா. காஞ்சீபுரத்தில் ஸுப்ரஸித்த வித்வானுக எழுந்தருளியிருந்த திருமலை அனந்தாண்பிள்ளை குன்றபாக்கம் சீமாச்சார் (ஸ்ரீநிவாஸாசார்ய) ஸ்வாமியின் திருத்தம்பியாரான ராமாநுஜாசார்ய ஸ்வாமியின் கனிஷ்ட குமாரரரான ஸ்ரீ உ. வே. T. C. A. பாஷ்ய மையங்காருக்கு வாழ்க்கைத் துணவியாகவிருந்தாள். அந்த அம்மா (முன் பக்கத்தில் காட்சி தருமவள்) சென்ற தைமீ 29உ (11—2—73) ஆசார்யன் திருவடி சார்ந்தாள். அந்த அம்மாவின் யஜமானரான பாஷ்யமையங்கார் இங்கு ஸேவை ஸாதிப்பவர் சென்னையில் ப்ரபல அட்வகேட்டாக விளங்கிவருகிறுர். திருக்குமாரர்களான ஸ்ரீமான் ராமாநுஜாசாரியரும் கோவிந்தாசாரியரும் உயர்பதவியில் வாழ்ந்து வருகிறுர்கள். ஜாமாதாக்களும் நல்ல ஸ்திதியில் இருந்து வருகிறுர்கள். இவர்களுடைய குடும்பம் மேன்மேலும் அபிவிருத்தி அடைந்து வரவேணுமென்று மங்களாசாஸனம் செய்து முடிக்கிறேன்.



இந்த அம்மாவின் சரமகைங்கர்யங்கள் திருவத்யயநம் உட்பட சென்னையில் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

# ஷஷ்டியப்தபூர்த்திமஹோத்ஸவம்

(ஸ்ரீமத் உபயவே மன்னார்குடி S. சௌரிராஜ அயங்காரும் ஸ்ரீமதிஜானகி அம்மாளும்)



உடுமலைப் பேட்டை ஸ்ரீ வெங்கிடேஸாமிஸ்வி லிருந்து ரிடைர்ஆன எஸ். சௌரி ராஜ அய்யங்காரின் ஷஷ்டியப்த பூர்த்திமஹோத்ஸவம் ராஜமன்னார் ஸன்னதியில் கோபாலசமுத்ர வீதியில் 24—2—73ல் வெகுவிமர்சையாக நடைபெற்றது. முன்னுடி ஐந்தாறு நாள் வேதபாராயணமும் திவ்யபிரபந்தஸேவாகாலமும் இதிஹாஸபுராண படனங்களும் நடைபெற்றன. அவ்வமயம் ஸ்ரீபெரும்பூதூர் H. H. எம்பார் ஜீயர்ஸ்வாமி:, ஸ்ரீஉ.வே.அப்பன் வெங்கிடாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. கோவிந்த நரசிம்மாசாரியர்ஸ்வாமி, ஸ்ரீ உ. வே, வேளுக்குடி வரதாச்சாரியர் ஸ்வாமி தேசிங்கராஜாசாரியர் ஸ்வாமி ஆகியோர் பலர்கலந்து கொண்டார்கள். ஸ்ரீவானமாமலை ஸ்வாமி, ஸ்ரீ அஹோபிலமடம், ஸ்ரீமத் ஸ்ரீரங்கம் ஆண்டவன்ஸ்வாமி ஆகியோர் வாழ்த்து அருளினர். இந்தஸ்வாமி திருக்கண்ணபுரம் சௌரிராஜப் பெருமாள் தேவஸ்தானத்தில் சிலவருஷங்கள் தர்மகர்த்தாவாக இருந்தனர். இந்த தம்பதிகளுக்கு மேன்மேலும் மங்களம் பொங்குக.



ரிஜிஸ்டர் நெ. 2975, 

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள், 2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த வுரைகள், 3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர வுரைகள், 4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள், 5. இதிஹாஸ புராண சரித்திர நூல்கள், 6. ரஹஸ்யார்த்த விளக்கநூல்கள், 7. வேதாந்தப் பொருள் விளக்க நூல்கள், 8. வேதவிசாரலக்ஷண நூல்கள், 9. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள், 10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள், 11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள், 12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடுகள், 13. வடமொழி நூல் திரள்கள், 14. ஹிந்தி பாஷையில், 15. தெலுங்கு பாஷையில், 16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M:O. செய்பவர்கள்

To

SRI T. A. ANANTHALWAN,
Manager, GRANTHAMALA OFFICE, Kancheepuram-3.
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA
KANCHEEPURAM-3.

To

Sriman / Srimathi




426 Sri Vengeepuram
Raghavacharyaswami,
Melkote, (Mysore State)

Edited and Published by P. B. Annangarachraya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-3.